10th September 1960]

SRI S. LAZAR: அதிகாரிகள் சற்றுத் தொலைவில் இருக்கிறார்கள். ஆதலால் அவர்களுக்குத் தகவல் கிடைப்பதற்குக் காலதாமதமாகிறது. சில அத்தியாவசியமான காரியங்களை பஞ்சாயத்துத் தலைவரோ, பஞ்சாயத்தோ செய்யவேண்டுமென்றால் அதற்கு பஞ்சாயத்து ஆபீசருடைய நல்ல எண்ணத்தை எதிர்பார்க்க வேண்டி ஏற்படுவதால், சில அவசர அதிகாரங்களையாவது (எமர்ஜென்ஸி பவர்ஸ்) அவர்களுக்குக் கொடுக்க அரசாங்கம் ஆலோசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இப்பொழுது நடைமுறையில் இந்தப் பஞ்சாயத்துக்களினுடைய மேற்பார்வைப் பொறுப்பு கலெக்டர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அந்தந்த மாவட்டக் கலெக்டர்கள் கவனித்து ஏதாவது துரிதமான நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றால் எடுத்துக்கொள்வார்கள்.

*Milk powder*

* 585 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் வருடத்தில் யார் யார் மூலம் எவ்வளவு பால் பவுடர் சென்னைக்கு இறக்குமதி செய்யப்பட்டது?

(ஆ) இலவசமாகச் சப்ளை செய்ய எவ்வளவு பால் பவுடர் அனுப்பப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

* 586 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have taken any decision to set up a Butter-*cum*-Milk Powder Factory during the Third Five-Year Plan period; and

(*b*) if so the place selected and the other details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) A scheme for the establishment of a Milk Powder Factory has been included in the draft Third Five-Year Plan of Madras State. No final decision regarding the implementation of the scheme, selection of place, etc., has been taken.

SRI N. K. PALANISAMI: கோயம்புத்தூர் மில்க் சப்ளை கோவாபரேடிவ் யூனியன் இதை நடத்துவதாக சர்க்காரிடம் ஏதாவது தகவல் கொடுத்திருக்கிறார்களா? அப்படியானால், அவர்களுக்கு என்னென்ன உதவிகள் செய்வதாக உத்தேசம்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கோயம்புத்தூர் கோவாபரேடிவ் மில்க் சப்ளை யூனியன் அதையொட்டி மில்க்